

# சிவோஹம் பாராயணத் தொகுப்பு
# சிவார்ப்பண மஞ்சரி - 117

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாமாவளி

அடியார்கள் அனைவரும் ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்
அருள்பெற அர்ப்பணிப்பு
சிவோஹம் சிவார்ப்பண ஞானதானம் - 2025 06/10 செவ்வாய்கிழமை
வைகாசி பௌர்ணமி

# 1.00 ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் நாமாவளி.

1

**சுந்தரன் நாமம் சுகானந்த போதம்**
**வந்தருள் செந்தா மரைமலர்ப் பாதம்**
**வெள்ளி மலையினில் விற்றிருப் போனே**
**வள்ளல் பணியில் மனம்இருப் போனே**

2

நாரி பாகன்திரு நல்லருள் பெற்றோய்
பாரில் திருமுனைப் பாடி.நாடு உற்றோய்
தெய்வத் திருநாவ லூரினில் ஆதி
சைவர் மரபில் ஜனித்த ப்ரக்யாதி

3

**சதுரார ணாதி சதிராகக் கற்றோய்**
**மகராஜன் ஏத்தும் வடிவமும் உற்றோய்**
**சடங்கவி மகன்மணம் சார்ந்திடக் கனந்தோய்**
**சடங்னில் அரன்வந்து தடுத்திடச் சினந்தோய்**

4

பித்தனென்று ஈசனைப் பேசிப் பழித்தோய்
பத்திரவா ளோலைப் பற்றிக் கிழித்தோய்
கத்தனச லோலை காட்டவே நன்றாய்
சித்தந்தெளிந் தேவல் செய்யப்பின் சென்றாய்

5

**அருட்டுறை யானென்று அயர்ந்தங் கழுதாய்**
**கருத்தன்மெய்க் காட்சியைக் கண்டு தொழுதாய்**
**வன்தொண்டன் நாமம் வனைந்துக்கொள் பற்றோய**
**அன்றே பித்தனென்று அருந்தமிழ்ச் சொற்றோய்**

6

திருத் துறையூர்த் தெரிசித்த குணாளா
பெருத்திடு தவநெறி பெற்ற தயாளா
சித்தவட மடத்தின் கண்வளர்ந் தாய்
முத்தன் பதத்தை முடித்துக் கிளர்ந்தாய்

**7**

**தம்மானை அறியாத சாதியென்று எடுத்தோய்**
**இம்மா நிலங்காண இன்தமிழ் தொடுத்தோய்**
**தில்லைச்சிற் றம்பலம் தெரிசித்த நாதா**
**எல்லையில் ஆனந்தம் எய்திய நீதா**

**8**

ஆரூர்க்கு வாவென்ற அரன் அசரீரி
கீரூறச் சிந்தை கிளர் சுகவாரி
வாகார் சம்பந்தர் வருதலம் என்றே
சிர்காழியை வலஞ்செய் குணக் குன்றே

**9**

**எம்பிரான் ஆரூரை எய்திய தீரா**
**தம்பிரான் தோழப்பேரூர் தாங்கும் கெம்பீரா**
**. நாளும்திரு ஆருர் நம்பனை ஏத்தி**
**ஆளும்தொண் டரோடு அமர்ந்தருண் மூர்த்தி**

10

பரவையார் எழில்நலம் பார்த்துற்ற மோகா
பரமன் அருளென்று பாடும் விவேகா
நாதனருள் சொப்பனம் கண்ட தூயா
மார்த்த பரவை மணங்கொண்ட நேயா

11

**. தில்லைவாழ் அந்தணர் எனப்பர சிவனே**
**திருவாய் மலர்ந்தடி கொடுக்கப் பெற்றவனே**
**திருக்தொண்ட தொகைபாடிச் சேவிக்க வந்தாய்**
**திருத்தொண்டர் நாப்பண் சிறப்பொடு உறைத்தாய்**

12

குண்டையூர் நெல்வரக் கோளிலிப் புகழ்ந்தோய்
அண்டர்சேர் ஆரூர் அமர்ந்துத் திகழ்ந்தோய்
தண்கோட் புலியன்பர் தந்திட நயந்தோய்
பெண்களைப் பெற்றிடும் பெண்களாய் வியந்தோய்

13

**திருப்புக லூர்பாடி.ச் செங்கல்லைப் பொன்னாய்**
**விருப்பொடு பெற்று விளங்கி யவனாய்**
**திருப்பனை யூராதி சேவித்துக் கீர்த்தி**
**விருத்தா சலத்கை விழைந்தமெய்ப் பூர்த்தி**

14

பன்னிரண் டாயிரம் பொன்பெற யோகர
மன்னுமுத்தா நதியின் விட்ட த்யாகா
திருத்தில்லை யாதியை சேவித் தடுத்தாய்
திருவாரூர் வாவியில் செம்பொன் எடுத்தாய்

15

**இட்டமாக் குருகாவூர் எய்திய தேவே**
**கட்டமுது ஈயக் களித்துண்ட கோவே**
**கச்சூர் அரன்தரும் பிச்சான முண்டாய்**
**பிச்சாடனன் செயல் மெச்சியே கண்டாய்**

16

அன்பாகக் காஞ்சி ஏகாம்பரம் ஆதி
இன்பாயங் கார்தலம் ஏத்திய சோதி
உன்னும் திருவொற்றி யூரை மதித்தாய்
பன்னும் படம்பக்கர் பாதம் துதித்தாய்

17

**அடி.மைசெய் சங்கிலி யாரெழில் கண்டோய்**
**கடிமணஞ் செய்யும் கருத்தது கொண்டோய்**
**மகிழடி யினில்பர வசம்செய்து தந்தோய்**
**மகிழும்சங் கிலியாரை மணஞ்செய் துகந்தோய்**

18

ஆரூருக்கே ஆசை யாலடி யொடுத்தோய்
காரூருங் கண்டார்க்குக் கண்களைக் கொடுத்தோய்
காஞ்சியைப் பாடிஓர் கண்பெற்றுக் கொண்டோய்
வாஞ்சித்து ஆரூரினில் மற்றைக்கண் கண்டோய்

19

**பரமனைத் தூதாக விரவினில் விட்டோய்**
**பாவையார் இன்பப் பரவையுட் பட்டோய்**
**ஏயர்கோன் கலிக்காம நாயனார்ச் சேர்ந்தோய்**
**தூயன் அருளாலே நேயங்கொண்டு ஆர்ந்தோய்**

20

சேரமான் பெருமானும் சேர விருந்தே
ஆரூர் சிலகாலம் அமர்ந்த மருந்தே
தேவிபங் காளனைத் தேர்ந்த சுகுணா
காவிரி ஆற்றைக் கடந்த நிபுணா

21

**முருகன் பூண்டீசர் இந்தமிழ் தொடுத்தாய்**
**திருடர்கொள் பொன்னைச் சிகரிவாய் எடுத்தாய்**
**மதலை அணிந்த முதலை நினைந்தாய்**
**முதலை விழுங்கின மதலையைத் தந்தாய்**

22

வந்துவஞ்சைக்கள வள்ளற்பரிக்தோய்
பந்தத்தொடக்கறப் பாடல்புரிர்தோய்
அத்தனருளால் வெள்ளானையையூர்க்தோய்
பத்தர்ஞும்வெள்ளிப் பருபதஞ்சேர்ந்சோய்

23

**எங்களை ஆண்டருள் எம்பெரு மானே**
**மங்களம் மங்களம் வாழிநற் கோனே**

**ஸ்ரீ சுந்தரமூர்த்தி சத்குரு திருவடிகள் போற்றி போற்றி**

## 2.0 ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் கீர்த்தனை

பண்: மாளவக்ரி ராகம் : ஹிந்தோளம் தாளம்: ஆதி

திருத்தொண்டத் தொகையருள் திருவாயா
திரைமுழுதும் புகழ்திகழ் தூயா

முத்திவழிக் கொரு கண்மணியே
மூலவிருட் கொரு விண்மணியே

சிவனைப் பெண்பால்தூது செலவிடுத் தோனே
செந்தமிழ் வேதத் தொடைதொடுத் தோனே
தம்பிரான் தோழனெனும் பெருந் தவனே
சைவத்தவக் கோலம் தாங்கும்மன்ன வனே

வன்றொண்டன் நாமம் வழங்கக்கொண் டோனே
மன்னுஞ் சிவானந்த மதுவையுண் டோனே
ஆலால சுந்தர ஆனந்தபோதா
காலாந்த அகனிலை கண்டருள் நாதா.

ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவடி வாழ்க,

## 3.0 ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அற்புதங்கள்

வெங்கரா உண்ட பிள்ளையை நல்குமே
வெள்ளை யானையின் மீதேறிச் செல்லுமே
மங்கை பாகனைத் தூது நடத்துமே
மறுவி ஆறு வழிவிட நிற்குமே
செங்கலானது தங்கம் அது ஆக்குமே
தியழும் ஆற்றிட்டுச் செம்பொன் எடுக்குமே
துங்க வான்பரி சேரற்கு நல்குமே
துய்ய நாவலூர் சுந்தரர் பாடலே

**திருச்சிற்றம்பலம்**